வெளியீடு எண் 455

# மகாகயிலாய யாத்திரை



ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள்
கயிலைநதிக்கரையில் பெருமானைப் பிரதிஷ்டைசெய்து வழிபடுதல்

தருமையாதீனம்

1959

ACC No 31545
74-3



தருமையாதீனம் 25 ஆவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த

பரமாசாரிய சுவாமிகள்

வெளியீடு எண் 455.

Sri. N. P. Subramania Iyer B.A. B.L.

உ
குருபாதம்

# மகாகயிலாய யாத்திரை

இந்நூல்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்
25 ஆவது குருமகாசந்நிதானம்
கயிலை ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள் அவர்களது
திருவுள்ளப்பாங்கின்வண்ணம் வெளியிடப்பெற்றது.




ANDAVAR LIBRARY, KOVILOOR
31545

தருமையாதீனம்

1959

உ
குருபாதம்
திருச்சிற்றம்பலம்

## சிவபோகசாரம்

ஆசையறுய் பாசம்விடாய் ஆனசிவ பூசைபண்ணுய்
நேசமுடன் ஐந்தெழுத்தைநீ நினையாய்—சீசீ
சினமே தவிராய் திருமுறைகள் ஓதாய்
மனமே உனக்கேன்ன வாய்.

## முத்திநிச்சயம்

உள்ளமலம் நீங்கி ஓங்கு சிவாநந்த
வெள்ளம் திளைத்ததுவாய் மேவுதலே—கள்ளவிழ்பூங்
கோத்தார் விரிசடையார் கூறு சிவாகமத்திற்
சித்தாந்த முத்தியெனத் தேறு.

திருச்சிற்றம்பலம்



கயிலை ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள்
திருக்கயிலையின் கிழக்குமுக தரிசனம் செய்தருளல்



கயிலை ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள்
திருக்கயிலையின் மேற்குமுக தரிசனம் செய்தருளல்

உ

சிவமயம்

# தருமையும் கயிலையும்

கயிலாய பரம்பரையிற் சிவஞான சித்திநெறி
காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர் மெய்ஞ்ஞான
பானு வாகிக்
குயிலாரும் பொழிற்றருமை வாழ்ஞான சம்பந்தக்
குரவன் மேலாஞ்
சயிலாதி மரபுடையோன் றிருமரபு நீடூழி
தழைக மாதோ.

எங்கும் பரந்த பெருவெளியை விண், வான், விசும்பு, ஆகாயம் முதலிய பல சொற்களாற் குறிப்பதுண்டு. அவ்வெளி அகவெளி, புறவெளி, அறிவுவெளி, அருள்வெளி என்று பல வகையாய் நிலவுகின்றது. உடம்பொடு கூடிய ஒவ்வொருயிர்க்கும் உள்வெளியும் புறவெளியும் உண்டு. அவற்றின் வேறாய் அறிவு வெளியும் அருள்வெளியும் உள்ளன. கண்ணுக்குப் புலனுவது புறவெளி. கருத்துக்குப் புலனுவது அக வெளி. அறிவே அண்டபிண்ட சராசரங்களைக்கொண்டு பெரிதாகி எங்கும் நிற்கும் வெளியாகின்றது. எல்லாம் அறிவில் அடங்கும். அறிவு எதிலும் அடங்காது. அறிவுள் அடங்காதன எவையும் இல்லை. எவற்றிலும் அறிவு செல்லும். இது பசுபோதம் (உயிரறிவு),

அதற்கும் உள்ளொளியாய்த் திகழ்வது அருளென்னும் உணர்வு. அதனுள் அடங்காத பொருள் ஒன்றும் இல்லை. எல்லாவுலகங்களையும் தனக்குள் அடக்கிக் கொண்டு, எள்ளளவு இடமும் தன்னைக் கொள்ளாதது இல்லை என்னும்படி, எங்கும் நிறைந்த பொருள் அருளாம் உணர்வே. ( இது சிவபோதம் ).

உணர்வே பராசக்தி எனப்படும். அப் பராசக்தி வியாபக வெளியே ஞானகாசம், பரவெளி, பெருவெளி, பேரின்பவெளி எனப் போற்றப்பெறுகின்றது. அங்குள்ளதே சிவலோகம். அதில் உள்ளதே தலைமைக் கைலாசம். அதுவே ஞானகைலாசம். அக் கைலாசத்திலிருந்து வந்ததே ஞானம். அந்த ஞானம் வந்த வழியே ஞானவழி. அதுவே திருக்கைலாச பரம்பரை. அது சைவத்தின் தனிப்பெருஞ் சிறப்புக்களுள் ஒன்று. அத் திருக்கைலாச பரம்பரைதான் சிவஞானத்தை உலகிற்குத் தந்தது. தந்து சிவாநந்தத்தை நன்னெறியாளர்க்கு விளைத்துவந்தது ; வருகின்றது. அவ் வரவு குருமரபினதாய்த் திருக்கைலாசத்தைத் தொடக்கமாக உடையதாயினும், வானுலகம் மண்ணுலகம் என்னும் நிலை வேறுபாட்டால் அக் குருமரபு அகச் சந்தானம் புறச் சந்தானம் என்று இருதிறம் ஆயிற்று.

திருக்கைலாயத்தில் சீகண்டமுதல்வரிடத்தில் நந்திதேவரும், அவரிடத்தில் சனற்குமாரரும், அவரிடத்தில் சத்தியஞானதரிசனிகளும், அவரிடத்தில் பரஞ்சோதி மாமுனிகளும் உபதேசம் பெற்றனர்கள். இவர்வரை அகச் சந்தானம். பரஞ்சோதிமாமுனிகள் ஆகாயமார்க்க

மாகப் போந்து, மண்ணுலகத்து மெய்கண்டதேவருக்கும், அவர் அருணந்திதேவர்க்கும், அவர் மறைஞானசம்பந்தருக்கும், அவர் உமாபதிதேவருக்கும் உபதேசித்தனர். இந் நால்வரும் புறச்சந்தானகுரவர் ஆவர். இப் புறச்சந்தானகுரவருள் நாலாமவராகிய உமாபதிசிவனும் அருள்நமச்சிவாயரும் (மச்சுச் செட்டியாரும்) மூன்றுமவராகிய மறைஞானசம்பந்த குரவருக்கு மாணுக்கர்கள். அருள்நமச்சிவாயரிடத்திலிருந்து வழிவழியாகக் காழிக் கங்கை மெய்கண்டார், காழிப் பழுதைகட்டிச்சிற்றம்பலநாடிகள், பழுதைகட்டிச் சம்பந்தர், சிவபுரம் ஞானப்ரகாசர், சிவபுரம் தத்வப்ரகாசர், செட்டித்தெருப் பழுதைகட்டி ஞானப்ரகாசர், சிதம்பரநாதமாசிலாமணி, கமலைஞானப்ரகாசர் ஆக ஞான பரம்பரை வளர்ந்தது. அக் குருக்கள்பால் உபதேசம் பெற்றவர் பற்பலர். அவர்களது பெருமையைத் தொகுத்துச் சுருக்கிக்கூறும் பாடலுள் ஒன்று :-

ஆய்வார் பதிபசு பாசத்தின் உண்மையை ; ஆய்ந்தறிந்து
காய்வார் பிரபஞ்ச வாழ்க்கையெல்லாம்; கல்விகேள்வியல்லல்
ஒய்வார்; சிவானந்த வாரியுள் ளேயோன் றிரண்டுமறத்
தோய்வார் கமலையுள் ஞானப்ர காசன்மெய்த் தொண்டர்களே.

அக் கமலைஞானப்ரகாசர்பால் ஞானோபதேசம் பெற்றவர் தருமைக் குருஞானசம்பந்தர். அவர்முதலாக விளங்கும் தருமையாதீன குருபீடத்தின் இருபத்தைந்தாவது பட்டம் இக் கயிலைக் குருமகாசந்நிதானம். ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள், திருக்கயிலை மலையைத் தரிசித்து

வரத்துணிந்து, இக்காலத்தில் (19-6-59 — 3-9-59) திருவருளால் நிறைவேற்றி, நம்மையும் வாழ்வித்தருள் கின்ருர்கள். இச் செயற்கரிய செயல் திருவருட்செயல். இதுவே திருக்கயிலாய பரம்பரையின் உண்மையை நாம் எல்லாரும் கண்கூடாக அறியக் காட்டியது. வாழ்க கயிலையைக் கண்ட குருமாமணி.

"கயிலைக் குருமகாசந்நிதானம்" எனப் பலரும் போற்றி விளங்கத் திகழும் நம் குருமாமணிக்கு இம் மகா கயிலாயமலைத்தரிசனம் எளிதின் வாய்த்ததற்குப் பண்டு செய்த தவமும் இன்றுள்ள தவமும் காரணமாகும்.

நம் குருமாமணி சிவபூஜா பரம்பரைத் தோற்றம் உடையது. இளமை முதலாகச் சிவநெறியில் வழுவாதது. திருமுறைப் பாராயணம் புரிவது. திருமுறைகளை உரையோடும்வெளியிடச்செய்தருள்வது. ஜபதபங்களைக் கடைப்பிடிப்பது. ஸ்ரீசோக்கநாதரை மிக்க பக்திசிரத்தையோடும் வழிபட்டுவரும் அளவிலாத பெருமையுடையது. திருவருளே துணையாயும் வடிவமாயும் கோண்டு திகழ்வது. திருப்பணிகளையும் மகாகும்பாபிஷேகங்களையும் முன்பும் பின்பும் எவரும் எவ்வாற்ருலும் ஈடும் இல்லை எடுப்பும் இல்லை என்னும்படி அளவிடற்கு அரிய வண்ணம் செய்வித்துவருவது. நற்போழுதுபோக்கிற்கு லக்ஷம் கோடியர்ச்சனைகளையும், வேற்றிக்குக் கோற்றவையையும், அருளுக்கு அபிராமியையும், செல்வத்திற்குச் செல்வமுத்துக்குமாரக்கடவுளையும், சிவஞானத்துக்குக் குருஞானசம்பந்தரையும், பேரின்பத்துக்குச் சோக்கேசனையும் வைப்புச் செல்வமாகக் கோண்டு

நல்வாழ்வு நடத்துவது. ஞானுபரணமே பூண்பது. முத்திநிச்சயத்தில் ஐயம் உருதது. சிவபோகசாரத்தை நுகர்வது. ‘ உள்ளமலம் நீங்கி ஓங்கு சிவாநந்த வேள்ளம் திளைத்து அதுவாய்’ மேவிய அநுபவத்தைத் திருக்கயிலையிலே உற்றுக் கேளரி குண்டம், மானசசரோவரம் முதலிய அற்புத தீர்த்தங்களில் மூழ்கித் தேளிந்தது. முன்பே கேதார யாத்திரையில் அங்குள்ள புரோதாயம் என்னும் புனித தீர்த்தத்தில் ஆடி யின்புற்றது. ‘ பரானந்தமே கதியாகக்கோண்டு மற்றேல்லாம் துயிலிற் கனவு என மதியாதிரு ’ க்கும் மருந்தை எம்போல்வார் பிறவி நோய்க்கு அருளி வாழ்வித்து வாழ்வது. ‘ சோல்லும் போருளும் இழந்து சுகானந்தத் தூக்கத்திலே அல்லும் பகலும் இருப்பது என்ருே கயிலாயத்தனே ’ என்ற பட்டினத்தார் விஞவிற்குச் சேயலால், இன்றே இருக்கக் கிடைத்தது என்று விடையிறுத்த வண்ணம், திருக்கயிலாயத்தைத் தரிசித்து, வந்து இனிது வாழ்கின்றது. இத் திருவருள் யாத்திரை அனுபவத்தின் முன்னறிவிப்புச் சுருக்க நூலாக இது வேளிவருகிறது. விரிவான விளக்க நூல் ஏனைய காசி யாத்திரை, இராமேசுவர யாத்திரை, கேதாரநாதம், பசுபதிநாதம் அமரநாதம் யாத்திரை நூல்களைப்போல விரைவில் வேளிவரும். வாழ்க கயிலைக் குருமகா சந்நிதானம். வாழ்க. வாழ்க. வாழ்க.

அடியன்

முத்து. சு. மாணிக்கவாசகன்

உ
குருபாதம்
திருச்சிற்றம்பலம்

# திருக்கயிலாய சிறப்பு

தாதார்கொன்றை தயங்குமுடியர் முயங்குமடவாளைப்
போதார்பாக மாகவைத்த புனிதர்பனிமல்கும்
மூதாருலகின் முனிவருடனு யறநான் கருள்செய்த
காதார்குழையர் வேதத்திரளர் கயிலைமலையாரே.

—சம்பந்தர்.

பொன்னின் வெண்டிரு நீறு புனைந்தெனப்
பன்னு நீள்பனி மால்வரைப் பாலது
தன்னை யார்க்கு மறிவரி யானென்றும்
மன்னி வாழ்கயி லைத்திரு மாமலை. —சேக்கிழார்.

திருச்சிற்றம்பலம்

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

# மகாகயிலாய யாத்திரை

சீரணியும் நுதலின்விழி மழுமான் நாகம்
திரிந்தும்எரி போருந்துவிடம் தேரிந்தி டாமல்
தாரணிஅன் பரையாள அவர்போல் வந்த
சைவசிகா மணிஎவர்க்கும் தலைவன் எங்கோன்
காரணியும் நேடியபோழிற் கமலை வேந்தன்
கருணைமழை போழியும்இரு கடைக்க ணுளன்
பாரணியும் ஞானசம் பந்தன் எந்தை
பரமன்இரு சரணமலர் பரவி வாழ்வாம்.

— ஸ்ரீ சம்பந்தசரணாலயர்

## மலையரசன் :

திருக்கயிலாயம் இமயத்தின் வடபால் உயர்ந்தோங்கிய பனிமலை. 'மன்னும் இமயமலை எங்கள் மலையே மாநிலமீது இதுபோல் பிறிதிலையே!' என்று பாரதி பேருமிதத்துடன் பாடினார். இந்தியநாட்டின் வடக்குஎல்லையாய் உலகத்தின் அச்சாணியாய் விளங்குவது இமயமலை. இது காஷ்மீரத்திலிருந்து அஸ்ஸாம் வரை சுமார் இரண்டாயிரம் மைல் விரிந்திருக்கிறது. இருநூற்றைம்பது மைல் அளவு அகன்றிருக்கிறது. என்றும் உருகாத பனிச்சுவர்கள் பல மலையுச்சியிலே உள்ளன. சிந்து, கங்கை. யமுனை, பிரம்மபுத்திரா போன்ற புண்ணிய ஆறுகள் இம்மலையில் உற்பத்தி

யாகி வருகின்றன. திருக்கேதாரம், பத்திரிநாதம், கங்கோத்திரி, யமுனோத்திரி, அமரநாதம், பசுபதிநாதம், துங்கநாதம் முதலிய பல சிறந்த தெய்விகத் தலங்கள் இம்மலையில் உள்ளன. கூர்மம், சிவலிங்கம், கேளரிசங்கரம், நந்தாதேவி பஞ்சசூலி, திரிசூலி, கயிலாயம், நங்கபர்வதம், மாந்தாதா, அன்னபூரணு, காகபுசந்தி, விநாயகர், கார்த்திகேயர், நந்தி போன்ற பல தெய்விக சிகரங்களையும் இம் மலைத்தொடரில் தரிசிக்கலாம். ஞானிகளின் உறைவிடமாய் நம் நாட்டிற்குப் பெருமை தேடித்தருவது இவ் விமயமலை. அகலம், நீளம், உயரங்களால் வேறு எம்மலைகளும் இம் மலைக்கு நிகராகா. இதனுல் இமயமலையை மலையரசன் என்பர்.

## இமயப் பிரிவுகள் :

இமயப் பெருமலை சிறிய இமயம், பெரிய இமயம், எல்லைகடந்த இமயம் என மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப் பட்டுள்ளது. இமயத்தின் தென்சாரலில் மேற்கூறிய திருத்தலங்கள் விளங்குகின்றன. ஆண்டுதோறும் ஆயிரக் கணக்கான மக்கள் இத் தலங்களுக்கு யாத்திரை சென்று வருகிறுர்கள். காஷ்மீரத்திலே உள்ள அமரநாதம், டேஹ்ரி கார்வால் பிரதேசங்களில் உள்ள யமுனோத்ரி, கங்கோத்ரி, கேதாரநாதம், பத்ரிநாதம், நேபாளத்திலே உள்ள பசுபதி நாதம், முக்திநாதம் இவைகள் எல்லாம் பெரிய இமய மலைப் பகுதிகளில் காணப்படுகின்றன. எல்லைகடந்த இமயமலைப் பகுதிகளாகிய திபேத்தைச் சேர்ந்த மலைப் பகுதியில் பஸ்மாசுரன் சிவபெருமானிடம் வரம் பெற்று அதை வரம் கோடுத்த அவரையே அழிப்பதற்குப் பயன் படுத்தி அழிந்த இடமாகிய தீர்த்தபுரியும், இராவணன் தவம் புரிந்த இராக்ஷச தடாகமும், கயிலையங்கிரியும், மானசசரோவரமும், மாந்தாதா தவம் செய்த 25000 அடி உயரமுள்ள மலைகளும் உள்ளன.

## இமயத்தின் மணிமுடி :

இமயமலையின் மணிமுடியாக விளங்குவது கயிலையங்கிரி. இது பேரிமயத்திற்கு அப்பாலுள்ள எல்லை கடந்த இமயத்தில் உள்ளது. இமயமலையின் வடக்குப் பக்கத்தில் மேற்குத் திபேத்தின் எல்லையில் அமைந்திருப்பது. இமயப் பெருமலைக்குத் தெய்வத்தன்மையை விளைப்பதாக விளங்குவது இக்கயிலாயம். கயிலாயம்திருக்கோயிலமைப்புக்களைப் போலவும் இறைவன் திருவுருவத்தைப்போலவும் யாவரும் காண எழுந்துநிற்பது. இங்கே சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்றான். திருக்கயிலைத் திருமலையையே சிவபெருமானுடைய வடிவமாகக் காணுவது நம் சமயமரபு. கயிலைமலைச் சிகரம் கடல்மட்டத்திற்குமேல் 22028 அடி உயரமும், 32 மைல் சுற்றளவும் கொண்டது.

இதனருகில் மானசசரோவரம் என்ற பெரிய தடாகம் ஒன்றுள்ளது. அழகில் அதற்கொப்பான தடாகம் உலகத்தில் வேறில்லை. கயிலாயமும், மானசசரோவரமும் சேர்ந்து கௌரிசங்கரம் என்று சொல்லப்படுகின்றன. கயிலாயம் சிவ வடிவமாகவும், மானசசரோவரம் சக்தி வடிவமாகவும் காட்சியளிக்கின்றன. கயிலாயம் இயற்கை யன்னையின் இதயம் போன்றது. கயிலைச் சூழலில் கௌரிகுண்டம், இராக்ஷச தடாகம், மானசசரோவரம் ஆகிய முப்பெருந் தீர்த்தங்கள் உள்ளன.

## சமய ஒற்றுமை :

இறைவன் 'கயிலாயத்து உச்சியுள்ளான்' என்பது அப்பரடிகள் அருள்வாக்கு. 'தன்னை யார்க்கும் அறிவரியான் என்றும் மன்னி வாழ் கயிலைத் திருமாமலை'

என்பது சேக்கிழார் செந்தமிழ். கயிலாயம் இந்துக்களுக்கே யன்றிப் பௌத்தர்களுக்கும், சைனர்களுக்கும் புண்ணியத் தலமாக விளங்குகிறது. நம்மைப்போலவே சைனர்களும், பௌத்தர்களும் இம் மலையைத் தரிசிக்க வருகின்றார்கள்.

## கயிலைமலை :

நம் சமயநூல்களில் பெரியபுராணம் கயிலையிலிருந்தே தொடங்குகிறது. சுந்தரர் இறைவனின் அணுக்கத்தொண்டராகவிளங்கியதைமுன்னிட்டுத் திருத்தொண்டத்தொகையை விரித்த தெய்வச்சேக்கிழார் பெரியபுராணத்தைத்திருமலையிலிருந்தே தொடங்கி திருமலையிலேயே முடித்தருளுகின்றார்.

## இராவணன் :

இலங்கையர்க்கிறைவன் இராவணன் அழியா ஆற்றல் பெற்று அவனியை ஆண்ட மாமன்னன். சிவபக்தன். கயிலையைப் பெயர்க்க முற்பட்டான். மலையினைத் தூக்க முயன்றான்; மலைமங்கை அஞ்சினாள். பெருமான் திருக்காற் பெருவிரல் மலையைச் சிறிதே ஊன்றியது. அவனுடைய சக்தி அவ்விரலுக்கு எம்மாத்திரம் ? இராவணன் தலை நெரிந்தான். சாமகீதம் பாடினான். மீண்டும் இறைவன் கருணையைப் பெற்றான். இதனை அப்பரடிகள் கயிலைப்பதிகம் ஒன்றில் எல்லாப் பாடல்களிலும் குறித்தருளுகின்றார்.

## காரைக்காலம்மையார் :

காரைக்காலம்மையார் பல திருப்பதிகளையும் பாடிப் பரவி எலும்பெழுந்தியங்கும் யாக்கையராய்க் கயிலாயநாதனைக் காணச்சென்றார். அவனிருக்குமிடத்தைக் காலால்

மிதித்தற்கு அஞ்சித் தலையால் நடந்தார். அம்பிகை பெருமானை அழைத்துக் காட்டி "யார் இவர்" என்றாள். பெருமான் "அம்மையே! வருக" என்று அம் முதாட்டியை வரவேற்று நீ விரும்பும் வரம் யாது என்றார்; அதற்கு அம்மையார்,

இறவாத இன்பஅன்பு வேண்டிப்பின் வேண்டுகின்றார்
பிறவாமைவேண்டும்மீண்டும்பிறப்புண்டேல் உன்னையென்றும்
மறவாமை வேண்டும்இன்னும் வேண்டும் நான்மகிழ்ந்துபாடி
அறவாநீஆடும் போதுன்னடியின் கீழிருக்கவென்றார்.

— காரைக்காலம்மையார் புராணம். 20.

சுந்தரர் :

கயிலையங்கிரியில் சிவபெருமானுக்கு அணுக்கத் தொண்டராய் விளங்கிய சுந்தரர் அநிந்திதை கமலினியார் மேல் கொண்ட காதலால் திருத்தொண்டத்தொகை பாடத் தென்னாட்டில் தோற்றுவிக்கப் பெற்றார். உலகியலில் புகாமல் எம்பெருமானால் தடுத்தாட்கொள்ளப் பெற்று, 'அர்ச்சனை பாட்டேயாகும் ஆதலால் மண்மேல் நம்மைச் சொற்றமிழ் பாடுக' என்ற இறைவனாணைப்படித் தேவாரப் பாமாலை புனைந்து சாத்தி மீண்டும் பெருமான் தேவர் முனிவர் புடைசூழ வெள்ளை யானைமேல் அழைத்து வருக என ஆணையிடக் கயிலைக்கு எழுந்தருளினார்.

சேரமான்பெருமாள் :

தமிழ்நாட்டின் முடியுடை மூவேந்தருள் சேரர்குடியில் தோன்றிச் சேரநாடாண்டமுடிமன்னர். இறைவன் சிவபூசை முடிவில் வழக்கமாய்க்கேட்கும் சிலம்பொலியைத் தாழ்த்து, இவருடன் சுந்தரரை நட்புக்கொள்ளச்செய்தான். சேரமான்

தன் தோழராய தம்பிரான்தோழர் கயிலை சேன்ருர் என்றறிந்ததும் குதிரையின் காதில் ஐந்தெழுத்து ஓதி வான வெளியில் பறந்து கயிலை வந்தடைந்தார். பேருமான், 'இங்கு நாம் அழையாமைவந்ததேன்' என்றுகேட்க 'சுந்தரர் பிரிவிற்காற்ருது அவர்பின் வந்தேன்; ஆண்டருள்க' என்று விண்ணப்பித்து 'நான் பாடிய ஞான உலாவைச் சேவிமடுத்தருளவேண்டும்' என்று அந்நூலை எம்பிரான் திருமுன்பு அரங்கேற்றினர்.

என்னே யடியார்க் கிவரருளுங் கருணையிருந்தவாறென்று
பொன்னேர் சடையார் திருநடஞ்செய்புலியூர் பொன்னம்பல
மிறைஞ்சித்
தன்னேரில்லா வன்ருெண்டர் தமையுங்காண்பனென விரும்பி
நன்னீர்நாட்டுச் சேலநயந்தார் நாமச்சேரர் கோமானுர்.

— சேரமான்பெருமாள் நாயனுர் புராணம் 45

சேரர் காவலர் பரிவுடன் கேட்பித்த திருவுலாப் புறங்கொண்டு
நாரி பாகரும் நலமிகு திருவருள்நயப்புட னருள்செய்வார்
ஊரனுகிய வாலால சுந்தரனுடனமர்ந் திருவிருஞ்
சாருநங்கண நாதர் தந்தலைமையிற் றங்குமென் றருள்செய்தார்

— வெள்ளானைச் சருக்கம் 48

பெருமிழலைக்குறும்பர் :

சுந்தரர் கயிலை உற்றதை அறிந்து, சுழுமுனை நாடி வழியாய்ப் பிரமரந்திரத்தைத் துளைத்து, உடலைவிட்டுக் கயிலைசென்று சுந்தரரோடு வீற்றிருந்தருளியவர்.

மண்ணில் திகழுந்திருநாவ லூரில்வந்த வன்ருெண்டர்
நண்ணற் கரிய திருக்கயிலைநாளையெய்த நான்பிரிந்து

கண்ணிற்கரிய மணிகழியவாழ்வார் போல வாழேனேன்
றெண்ணிச் சிவன்தாளின்றே சேன்றடைவன் யோகத்தா
லேன்பார்.

காலு கரணங் களுமோன்ருய் நல்லஅறிவு மேற்கோண்டு
காலும் பிரம நாடி வழிக்கருத்துச் சேலுத்தக் கபாலநடு
வேல வேமுன் பயின்றநேறி யேடுத்த மறைமூலந்திறப்ப
மூல முதல்வர் திருப்பாத மடைவார் கயிலை முன்னடைந்தார்.

— பெருமிழலைக்குறும்ப நாயனர் புராணம் 9, 10

## அப்பரடிகள் :

சம்பந்தர் காளத்திமலையிலிருந்தே கயிலைநாதனைக் கண்டார். அப்பரடிகள் மன உறுதியோடு கயிலாய யாத்திரை தோடங்கி ‘ ஆளும் நாயகன் கயிலைகண்டன்றி மாளும் இவ்வுடல்கோண்டு மீளேன் ’ என்று நடந்தும், புரண்டும், தவழ்ந்தும் சேன்ருர். பேருமான் வழியில் தோன்றி இவர் உறுதியை அறிந்து ‘ இங்குள்ள குளத்தில் மூழ்கித் திருவையாற்றில் கயிலைக் காட்சி காண்க ’ என்று பணிக்க அவ்வாறே, அடிகள் மூழ்கி ஐயாற்றில் கயிலாய தரிசனங்கண்டு களித்துப் போற்றினுர்.

## ஔவையார் :

ஔவையாரை விநாயகப்பேருமான் தன் துதிக்கையால் கயிலாயத்திற்குத் தூக்கிச் சேன்றதாக வரலாறு கூறுகிறது.

## கண்ணனும் அர்ச்சுனனும் :

அர்ச்சுனன் பாரதப்போரில் சிறந்த படைக்கலங்களைச் சிவபேருமானிடம் வேண்டிப் பேறக் கண்ணனுேடு கயிலை சேன்ருன். சேன்று பல படைகளைப் பேற்றுவந்தான்

என்றும், தருமர் கயிலாயத்தை அடைந்தார் என்றும் பாரதம் தெரிவிக்கிறது.

## திருமூலர் :

திருமந்திரமருளிய திருமூலர் கயிலையில் முனிவர் பெருமக்களோடு உடனுறைந்து தென்னாடு வந்தவர் என்று பெரியபுராணம் கூறுகிறது.

## கயிலாய பரம்பரை :

ஸ்ரீ கண்ட பரமசிவன் நந்திதேவர்க்கருளிய ஞானோபதேச பரம்பரை அகச்சந்தான புறச்சந்தான குரவர் வழியே கயிலாய பரம்பரை என இன்று ஞானாதீனங்களாக விளங்கி வருகிறது.

## வழியும் பயணமும் :

கயிலாயத்திற்குச் செல்வோர் பேரிமயத்தைக் கடந்தாக வேண்டும். மெய் வருத்தம் பாராது செல்வோர்க்கே இதனைக் கடந்து செல்லுதல் எளிதாகும். நம் நாட்டிலிருந்து கயிலாயத்திற்குச் செல்லப் பல வழிகள் உள்ளன. காஷ்மீரத்தின் தலைநகரான ஸ்ரீநகரிலிருந்து கிழக்குத்திசையாகக் கயிலாயத்திற்கு ஒரு வழி செல்கிறது. இது மிக நீண்ட வழியாகும். டேஹ்ரி சமஸ்தானத்திலுள்ள கார்வால் என்னும் இடத்திலிருந்து மற்றோர் வழி செல்லுகிறது. சிம்லாவினின்று சிப்கி கணவாய் வழியாக ஒரு வழியுள்ளது. கங்கைநதி உற்பத்தியாகும் கங்கோத்ரி என்னும் தலத்தினின்று நீலக் கணவாய் வழியாக ஒன்றும், பத்திரிகாசிரமம் என்னும் க்ஷேத்திரத்தினின்று மாணக் கணவாய் வழியாக மற்றொன்றுமாக வேறு இருவழி

களும் செல்லுகின்றன. பத்திரிகாசிரமத்தினின்று செல்லும் வழியில் தேலிங்க மடம் என்னும் புகழ்பெற்ற திபேத்திய பௌத்த மடாலயம் ஒன்று உள்ளது. பத்திரிகாசிரமத்திற்குக் கீழ்ப்புறம் இருபது மைல் தூரத்தில் ஆதி சங்கரரால் அமைக்கப்பட்ட ஜோதிமடம் இருக்கிறது. அதினின்றும் நீதிக்கணவாய் வழியாக ஒரு வழி கயிலாயத்திற்குச் செல்லுகின்றது.

கயிலாயத்திற்கு யாத்திரை செல்ல விரும்பும் நம்மனோர் அல்மோராவினின்று தொடங்கி லிப்புத் தடாகக் கணவாய் வழியாகச் செல்லலாம். குளிர்காலத்தில் இது பனிக்கட்டியால் முற்றிலும் மூடப்பட்டுவிடுகின்றது. அக்காலத்தில் இதனைக் கடந்து திபேத்தில் புகுதல் இயலாது. இளவேனிற் காலத்தில பனிக்கட்டி உருகத் தொடங்கி, முதுவேனிற் காலத்தில் பெரும்பாலும் அகன்றுவிடும். அப்பொழுது இக்கணவாய் திறக்கப்படும். இது திறக்கப்பட்டதும் திபேத்தினின்றும் வணிகர்கள் இதனைக் கடந்து இந்தியாவுக்கு வரத்தொடங்குவர். அச் செய்தி அல்மோராவுக்கு எட்டியதும் அதனை எதிர்நோக்கி அங்குக் காத்திருக்கும் யாத்திரிகர் தங்கள் யாத்திரையைத் தொடங்குவர். ஆனி, ஆடி, ஆவணி ஆகிய மூன்று மாதங்களே யாத்திரைக்கு ஏற்றகாலமாகும். அக்காலத்திற்குள் யாத்திரையைத் தொடங்கி முடித்துக் கொண்டுமீளுதல்வேண்டும்.

வலம் வரும் வழி :

**ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் சென்ற யாத்திரை வழி கயிலையை வலம் வருதற்கு ஏற்ற வழியாகும்.** நைநிட்டாலிலிருந்து - **(பாலகயிலாயம்)** -

ஜாகேஷ்வரம் - அல்மோரா - சோமேஷ்வரம் - வைத்திய நாதம் - கௌசானி - பாகேஷ்வரம் - கப்கோட் - தேவ் பகோர் - சியாமாதூரா - க்வீட்டி - கிர்காம் - டிக்சன் - மர்த்தோலி - மிலம் - மாலாஷிலாங் - சம்காம் - துங் - உண்டா கணவாய் - ஜயந்தி கணவாய் - குங்கிரி பிங்கிரி கணவாய் - சிர்ச்சின் - தஜாங் - கும்சின் - மாணித்தங்கா - சுகாடு - குருஜேம் - தீர்த்தபுரி - தபக்ஷேலா - பைலா கும்பா (கைலைப் பகுதி) - நந்திகும்பா, மேற்குமுகம் - தோராபுக், வடக்குமுகம் - கௌரிகுண்டம், சுண்டல்புக் கிழக்குமுகம் - தர்சன், தெற்குமுகம் - புஸ்க்குடு - ஸ்யூ கும்பா - பும்து - மானசசரோவரம் - லோங்காடோங்கன் - இராக்ஷதஸ்தால் தென்கிழக்கு - (மாந்தாதா அடிவரை) குர்லாக்கணவாய் - கௌரி உட்யார் - ரங்கங் - தக்களக் கோட்டை - பாலா - லிப்புக்கணவாய் - ஷேல்ஜம் - காலா பாணி - சேராஸ் - கர்ப்பியாங் - புத்தி - மால்பா - ஜிப்தி - சிர்கா - கேலா - பலவகோட் - தர்ச்சூலா - ஆஸ்கோட் - பேரிசீனு - பித்தாரகோட் - சம்பாவத் - தனக்பூர் - பிலிபத்- லக்னே - வாரணசி.

மகாசந்நிதானம் அவர்களின் யாத்திரை :

திருக்கயிலைத் திருமலையைத் தரிசிக்க வேண்டும் என்ற எண்ணம் குருமகாசந்நிதானத்திற்கு இடையருது பெருகியது. பல தலயாத்திரைகளைச் செய்து சிவ புண்ணியக் கருவூலமாய் விளங்கும் அவர்கள் ஆன்மார்த்த மூர்த்தியாகிய சோக்கலிங்கப் பெருமானிடம் "அண்ணலே யேனை யாண்டுகொண்டருளிய அமுதே விண்ணிலே மறைந்தருள்புரி வேத நாயகனே கண்ணினுல் திருக்கயிலை யிலிருந்த நின்கோலம்நண்ணி நான் தொழ நயந்தருள்புரி" எனப் பணிந்தார்கள்.



நைநிடால் இராஜ்ய பாலர் மாளிகை முன்புறத்தில் ஸ்ரீலஸ்ரீ கயிலை குருமகாசந்நிதானம் அவர்கள்
உயர்திரு. V. V. கிரி அவர்கள் குடும்பத்தினருடன்



நைநிடாலில், கயிலை யாத்திரைக்கு எழுந்தருளியிருந்த ஸ்ரீலஸ்ரீ கயிலை குருமகாசந்நிதானத்துக்கு
கீதாசங்க வரவேற்பு

சோக்கலிங்கப் பேருமானின் அருள் இசைவு பேற்ருர்கள். 19-6-59 ஆம் நாள் வேள்ளிக்கிழமை புறப்படுவ தேனத் தீர்மானமாயிற்று. அப்பரடிகளுக்குக் கயிலைக் காட்சியைக் காட்டிய தேன் கயிலாயமாகிய திருவை யாற்றை வழிபட்டு யாத்திரைக்கு எழுந்தருளினுர்கள்.

## நைநிடால் வரையில் :

காசி சென்று கங்கையில் நீராடி கேதாரீசுவரரையும், விசுவநாதரையும் வழிபட்டார்கள். விசேஷ அபிஷேக ஆராதனைகளையும், லக்ஷார்ச்சனையையும் சிறப்புறச் செய் தார்கள். காசியில் குமாரசாமி மடம் திருப்பனந்தாள் காசி மடமாய் விளங்குவது. குருநாதர் வருகையைக் கேட்டதும் காசிவாசி சுவாமிகள் அவர்கள் வரவேற்புக்களேல்லாம் சிறப்புறச் செய்வித்திருந்தார்கள். காசிமடத்தில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களுக்குச் சிறப்பாக உபசரிப்புக் கள் செய்யப்பேற்றன. ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் குருமகாசந்நிதானம் அவர்கள் வட இந்தியத் தல யாத்திரைக்கு எழுந்தருளும்போதேல்லாம் காசி மடத்தின் வரவேற்புக்கள் நினைவிலிருக்கும்படி நடை பேறல் வழக்கம். மகாசந்நிதானம் அவர்கள் காசியி லிருந்து நைநிடாலுக்கு எழுந்தருளினுர்கள். நைநிடாலில் கீதாசத்சங்கத் தலைவர் வித்யானந்தசரசுவதி சுவாமிகள் திருக்கயிலைக்குப் பன்முறை சென்று வந்த அனுபவ முடையவர்கள். இவர்களுக்குத் திபேத்து முதலிய பலமோழி களில் நல்ல பயிற்சியுண்டு. இவர்களையும் அழைத்துக் கோண்டு 3—7—59ல் நைநிடாலில் இருந்து புறப்பாடா யிற்று. அங்கு மகாசந்நிதானம் அவர்களின் வருகையை அறிந்த அப்பகுதி இராஜ்ய பாலகர் உயர்திரு. வி. வி. கிரி அவர்கள் மகாசந்நிதானம் அவர்களை வணங்கி வரவேற்று

ஆசி பெற்ருர்கள். உத்தரப் பிரதேச அரசாங்க உதவிகள் கிடைத்தன. கயிலை யாத்திரை தொடங்கியது.

## கப்கோட் :

உந்தூர்தியில் மகாசந்நிதானம் அவர்கள் புறப்பட்டார்கள். அல்மோரா வழியாக, பாலகயிலாயம் தாருகாவனம் என்று போற்றப்படுகின்ற ஜாகேஷ்வரம், அல்மோரா சோமேஷ்வரம், வைத்யநாதம், கௌசானி, பாகேஷ்வரம் சென்று ஆங்காங்கு உள்ள மூர்த்திகளை வழிபட்டார்கள். பாகேஷ்வரத்தில் கோமதிநதியும், சரயுநதியும் சங்கமமாகின்றன. பாகேஷ்வரரை வழிபட்டு கப்கோட் என்ற ஊருக்குப் பஸ் மூலம் சென்ருர்கள்.

இதற்குமேல் நடைபாதை. சரயுநதிக்கரையின் வழியே செல்லுதல் வேண்டும். வழி ஏற்றமும் இறக்கமுமாகச் செல்லுகிறது. கப்கோட்டில் படுக்கை முதலிய பொருள்களைச் சுமந்து செல்லக் குதிரைகளும், கூலிகளும் அமர்த்தப்பட்டார்கள். மூட்டைகள் எல்லாவற்றையும் எடைபோட்டு நிறுத்துக் கூலி பேசிமுடித்துப் புறப்பட்டோம். முதல் நாள் பெய்த மழையால் சரயுவில் வெள்ளப்பெருக்கு. வழி சேரும் சகதியுமாக ஆகிவிட்டது. தண்டி ஏற்பாடு செய்யப்பட்டது. நடை துன்பம் தருவதாகத்தான் இருந்தது.

## யாத்திரை வழியில் :

கப்கோட்டிலிருந்து தேவ்பகோர் என்னும் ஊரையடைந்தோம். நண்பகல் உணவுக்குப் பின்னர் கால் நடை தொடங்கியது. கடும் ஏற்றம். இரவு 8 மணிக்கு சியாமாதூரா சென்றடைந்தோம். அன்று நல்ல மழையும்



பனிப்பாலத்தில் புகுந்து கௌரி கங்கை பெருகிப் போவது



திருக்கயிலாய தரிசன யாத்திரையில் - மார்த்தோலி நந்தாதேவி தரிசனம்

பனியும் இருந்தன. காலையில் க்வீட்டி என்னும் ஊரை நோக்கிப் பயணம் தொடங்கியது. வழியில் ராமகங்கை என்ற காட்டாறு குறுக்கிட்டது. பல மலைச்சரிவுகளும் கணவாய்களும் வழியடைத்து நின்றன. அவற்றைக் கடக்கப் பல மலைஉச்சிப் பகுதிகளை எட்டிப் பிடிக்க வேண்டியிருந்தது. யாத்திரையில் உறுதியைச் சோதிக்கும் பகுதிகளாக இவை அமைந்தன. அதைத் தாண்டி க்வீட்டி செல்வது மிக்க துன்பத்தை உண்டாக்கியது. இரவு 8 மணிக்கு க்வீட்டியை யடைந்தோம். வழியில் கிர்காம் என்னுமூரில் நடுப்பகலுணவை முடித்துக்கொண்டு இரவு 7 மணிக்கு டிக்சன் என்னுமூரை அடைந்தோம். அங்கே மூன்று நாட்கள் தங்கவேண்டியதாயிற்று. பஞ்சசூலி தரிசனம் இங்கே கிடைத்தது.

டிக்சனையோட்டி கலாமுனி என்ற பெருஞ்சிகரம் இருக்கிறது. அது மருத்துவ மலை. அவ்வூரையோட்டிக் கேளரி கங்கையென்னும் பேராறுஓடுகிறது. அங்கிருந்துபுறப்பட்டு வழியில் லிலம் என்னும் இடத்திலும் 'புகுதியார்' என்னும் இடத்திலும் குகைகளில் இரவுகளைக் கழித்து மூன்ருவது நாள் மர்த்தோலி சேர்ந்தோம். வழியில் பனி உறைவுகளில் 6 பர்லாங் தொலைவு நடந்தும் மிகக் கடுமையான ஏற்றங்களைக் கடந்தும் மாலை 5 மணிக்கு மர்த்தோலியை அடைந்தோம். மர்த்தோலியிலிருந்து நந்தாதேவி, நந்த கோட் திரிசூலி முதலிய புனித சிகரங்களின் தரிசனம் கிடைத்தது. இவை முக்கியமானவை. மர்த்தோலியில் நந்தாதேவிக்குத் தனிக் கோவிலும் உள்ளது.

மிலம் :

மறுநாள் அங்கிருந்து புறப்பட்டு மிலம் என்ற இந்திய கடைசிக் கிராமத்தை யடைந்தோம். இங்கிருந்து கேளரி

கங்கை உற்பத்தியாகிறது. இங்கு யாத்திரை செய்வோருக்கு அடையாளச் சீட்டும் பயணச் சீட்டும் வழங்கப்படுகின்றன. அரசாங்க நிலேயில் முன்னறிவிப்பு இருந்தமையால் எங்கட்கு எளிதாக எல்லா வசதிகளும் கிடைத்தன. இதுவரை தங்குவதற்குப் பல கட்டிடங்கள் கிடைத்தன. இனி கர்ப்பியாங் வரை கூடாரங்களில்தான் தங்குதல் வேண்டும். ஆகவே கூடார அமைப்பு கூலி இவைகளுடன் இங்கிருந்து மீண்டும் பயணம் தோடங்கியது.

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தைத் திரு. பகத்சிங் பாங்தே என்ற பேரிய வியாபாரி வரவேற்று வழிபட்டு உபசரித்து ஆசி பேற்ருர். பின்னர் அங்கிருந்து புறப்பட்டு மாலாஷிலாங்கை அடைந்தோம். உடா நதிககரையின் வழியே ஏறு குதிரைகளில் பயணம் தோடங்கப்பட்டது. அங்கிருந்து புறப்பட்டு வழிகாட்டிகளுடன் ‘ துங் ’ என்னும் பகுதியையடைந்தோம். இங்குக் கூடாரமடித்து இரவைக் கழித்தோம். ‘ துங் ’கைவிட்டுக் காலேயில் புறப்பட்டோம். அடர்ந்த பனிமூட்டம் எங்கும் பரவியிருந்தது. இங்கிருந்து ஏற்ற இறக்கங்கள் மிகுதி. பல கணவாய்களேத் தாண்ட வேண்டியிருந்தது. பல மலேச் சிகரங்கள் வழியில் மயன் படைப்போவேன வியப்படையுமாறு சிவலிங்கம், கோயில், கோட்டைகள், மண்டபங்கள், கோபுரங்கள் போலக் காட்சி யளிக்கின்றன. குங்கிரி பிங்கிரியில் சேங்குத்தாக 3000 அடி ஏறவேண்டியிருக்கிறது. குதிரைகளில்லாமல் கால் நடையாகச் சேல்லுதல் இயலாது. இச் சேங்குத்துமலேயில் ஏறியதும் கயிலாய தரிசனம் எங்களுக்குக் கிடைத்தது. கயிலாயநாதனேக் கண்டோம். கண்களில் ஆனந்தக் கண்ணீர் பேருக்கேடுத்தது. ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் ஐந்துபேரறிவும் கண்களே கோள்ள ஆனந்த வேள்ளத்துள் திளேத்தார்கள். கயிலேநாதனேக் கண்ட



விலம் குகையில் மாலே வழிபாடு



ஸ்ரீலஸ்ரீ கயிலை குருமகாசந்நிதானம் அவர்கள் - புக்தியார் குகையில் விடிந்தது

இன்பத்தால் துன்பங்கள் எல்லாம் நொடியில் பறந்தன. மறுபடியும் ஒரு பெரிய இறக்கம். அதைக் கடந்து இரவு 7 30 மணிக்குச் சிர்ச்சின் என்ற பகுதியை வந்தடைந் தோம். அங்கு அன்றிரவு கழிந்தது. மறுநாள் உணவிற்குப் பின் மேலே செல்லும் முயற்சியைத் தொடங்கினோம். களைப்பு மிகுதியால் மீண்டும் தங்கநேரிட்டது.

இயற்கையமைப்பு எங்கள் சோர்வை மருந்தெனப் போக்கியது. நாங்கள் பின்னர் திபேத்தியப் பகுதிகளான தஜாம், சுகாடு, குருஜெம் முதலிய பகுதிகளைக் கடந்து தீர்த்தபுரிவந்தடைந்தோம். இவ்வழியில் பனி உருகிவரும் சுகாட், சட்லஜ் நதிகளைத் தாண்டவேண்டும்.

### தீர்த்தபுரி :

பஸ்மாசுரன்சம்ஹாரம் ஆன பெருந்தலம். யார்தலையில் கைவைத்தாலும் அவர்கள் அழிந்துபோகவேண்டுமென்ற வரத்தைப் பஸ்மாசுரன் பெருமானிடம் பெற்றான். வரத்தின் சக்தியை அறிய பெருமான் தலையிலேயே கைவைக்க முயற்சித்தான். இதனால் எல்லா உலகங்களுமே அழிந்து போகக்கூடிய நிலையேற்பட்டது ; விஷ்ணு மோகினி வடிவெடுத்து அசுரன் முன்வந்து நின்று ஆடிப் பாடி அவனை மயக்கினார். வரத்தை மறந்தான் அசுரன். பெண்ணின்பத்தை நாடினான். மோகினி அசுரனை நோக்கித் ‘ தலைதேய்த்து முழுகி வந்தால் உன்னைக் கூடுவேன் ’ என்றாள். தன்னை மறந்து வரத்தையும் மறந்து தன் தலை யிலேயே கைவைத்து எரிந்தழிந்தான். தன்னழிவிற்குத் தானே காரணமானான். அவன் அழிந்த இடத்தில் வெந்நீர் ஊற்றுக்கள் பல இருக்கின்றன. ஸட்லேஜ் நதிக்கரையில்

ஆற்றையோட்டி ஒரு சில அடிகளுள் கோதிக்கும் வெந் நீரும் ஆற்றில் பனி உருகிவரும் தண்ணீரும் அடுத்து அடுத்து அமைந்திருக்கின்றன.

## கயிலைக் காட்சி :

தீர்த்தபுரியில் குருமகாசந்நிதானம் திருமஞ்சனம் கொண்டு விபூதி குண்டத்தில் விபூதி எடுத்துக்கொண்டு யாத்திரை வெற்றிவேண்டிக் கயிலைநாதருக்கும், குருஞான சம்பந்தருக்கும் சிறப்பு வழிபாடு நடத்தினார்கள். அங்கிருந்து புறப்பட்டு அப்பர் பெருமான் கயிலைக்காட்சி கண்ட ஆடி அமாவாசையன்று கயிலையின் மேற்குத் திருவாயிலுக்கு வந்து சேர்ந்தோம். எல்லையைக் குறுகி யதும் எங்கள் உள்ளங்கள் சீவ போதமற்று சிவபோத மெய்தின. இரும்பைக் காந்தம் இழுப்பது போன்று எங்கள் உள்ளங்கள் ஈர்க்கப்பட்டன. ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் தாயைக் கண்ட கன்றுபோல் மனம் உருகி முன்புசெய் தவத்தினீட்டம் முடிவிலா இன்பமான அன்பினை எடுத்துக்காட்ட அளவிலா ஆர்வம் பொங்கி மன்பெருங்காதல்கூர வள்ளலார்மலையை நோக்கி என்பு நெக்குருகி உள்ளத்தெழு பெருவேட்கையோடு தலைவன் தாள் தலைப்பட்டார்கள். காளத்தியப்பரைக் கண்ணப்பர் கண்ட காட்சி எங்கள் நினைவுக்கு வந்தது. ' சம்பந்தரும் அப்பரும் அகக்கண்களால் அறிந்து உணர்த்திய அனுப வங்களை நேரில் காணும்போது மெய்சிலிர்த்தது. அங்கு நின்று எல்லோரும் கயிலைத் திருப்பதிகங்களை முறையாக ஓதினோம். " அரவொலி ஆகமங்கள் அறிவார் அறிதோத் திரங்கள் விரவிய வேதஒலி விண்ணெலாம் வந்தெதிர்ந் திசைப்ப " என்று சுந்தரர் கண்டு பாடியருளிய பாடற் பொருள் அநுபவத்திற்கு வந்தது. மேற்குத் திருவாயிலி



மிலத்தில் திபேத்தியர்கள் 12,000 அடி



தக்களக்கோட்டை கும்பா

லேயே கூடாரமடித்துத் தங்கினேம். அதற்கு நந்திமுகம் என்றுபெயர். வழியில் காகபுசந்தி, விநாயகர், கார்த்திகேயர், நந்திதேவர் சிகரங்களும் இராக்ஷச தடாகமும் காட்சி யளித்தன.

## தெய்வத் தோற்றம் :

கண்களில் ஆனந்த அருவிநீர் சோரியக் கைகளை உச்சிமேற் குவித்துத் தன்வசமற்று சிவபோகத்தில் திளைத் தோம். அங்கு ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் தூபதீபங்கள்காட்டிக் கயிலாயநாதனைவழிபட்டார்கள். அங் கிருந்து கயிலையங்கிரி மேற்குத் திருவாயிலுக்குச் செல்ல முற்படும் நேரம். ஒரு தெய்விகத் தோற்றம்; தன்னந் தனியே ஒரு பெண். அழகெலாம் திரண்டு நின்றதென எதிரேவந்தது. மனிதசஞ்சாரமற்ற அந்தஇடத்தில் தன்னந் தனியாய் வந்த அப்பெண்ணைக் கண்டதும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் அம்பிகையே எதிரே வந்து அழைக்கிருள் என்ருர்கள். எங்கள் உடம்பு சிலிர்த்தது. தின்பண்டங்கள் வழங்கினுர்கள். நிழற்படமெடுக்க முயன் ருேம்; ஆனுல் முடியவில்லை. அப்பெண் எங்களைப் பிரிந்துசென்ற பின்னர் நாங்கள் அதைப் பார்க்க முடிய வில்லை. முன்போ பின்போ அவ்வுருவைக் காணவில்லை. ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் 'கோற்றவைத் தாய் நமக்குக் கயிலைக் காட்சியில் வேற்றியருள வந்துவிட்டாள்' என்று கூறினுர்கள். எங்கள் யாத்திரை இனிதே முடிய அம்பிகையின் அருள் துணை நின்றதைக் கணந்தோறும் உணர்ந்தோம்.

மறுநாள் கயிலைநதியில் தீர்த்தமாடி ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் தருமையிலிருந்து எடுத்துச் சென்ற

நந்தி, இலிங்கம் இவற்றைப் பிரதிஷ்டை செய்து கயிலை நதியிலேயே விசர்ஜனம் செய்தார்கள்.

கயிலை அமைப்பு :

கயிலைநாதன் திருவுருவம் பனி உறைவு பெற்றதாக விளங்குகிறது. முன்னே உள் நந்தி பல மண்டபங்கள். நிருத்தசபை அமைப்புக்கள், அர்த்தமண்டபம், மகாமண்டபம் கொடிமரம், பலிபீடம் முதலியவற்றுடன் இயற்கையாக எழிலோங்கி நிற்கிறது. கயிலைப் பனியுறைவுகளிலிருந்து அங்கங்கும் பல சிற்றருவிகள் விழுந்து கொண்டேயிருக்கின்றன. சிவபுண்ணிய சீலர்களாகிய அன்பர்களுக்கே முழுவதும் காட்சி கிடைக்கும். பலர் அங்குச் சென்றும் பெருமான் காட்சி காணுது, பனி மூட்டமோ, மழையோ, பனிபெய்தலோ, கடுங்காற்ருே இதுபோன்ற ஏதாவதொரு காரணத்தால் வலம் வருதலும் முடியாமல் கண்டதாக மனஅமைதி கொண்டு திரும்பியிருக்கிருர்கள்.

கயிலைக்கு மாலையணிந்தது போல மேற்கு வடக்குக் கிழக்கு மூன்று பகுதிகளிலும் நதிகள் சூழ்ந்து ஒடுகின்றன. தெற்குப் பகுதிகளில் எல்லாம் ஒன்ருகக்கூடி இராக்ஷச தடாகத்தைச் சென்றடைகின்றன. இது ஒரு பெரிய மாலையமைப்பாக விளங்குகின்றது. பெருமான் மேற்கு முகமாக எழுந்தருளியுள்ள தோற்ற அமைப்புக் காணப்படுகின்றது. வடகிழக்குமூலையில் கௌரி தவமிருந்த கௌரி குண்டம் என்னும் தீர்த்தம் அமைந்திருக்கிறது. நான்கு பிராகாரங்களும் சுற்றிவர முப்பத்திரண்டுமைல் தொலைவு. உள்சுற்று ஒன்றுண்டு. முதலாவதை வெளிப்பரிக்ரமம் என்றும், மற்றையதை உட்பரிக்ரமம் என்றும் சொல்லுகிருர்கள். வெளிப்பரிக்ரமம் 12 முறை செய்தவர்கள்

